# சேயூர் முருகன் திருப்புகழ்

# "அந்தாதி, காவடிச்சிந்து"



# திருவள்ளுவர் கலம்பகம்

மற்றும்

# உள்ளுதற்கினிய திருவள்ளுவம்

ஆசிரியர்

கவிஞர். இளம்பூரணனார்
(சி. து. கன்னிசாமி)

கிடைக்குமிடம் :

செய்யூர் புலவர். வ. கந்தசாமி
*31, மண்டபம் 2வது தெரு,*
*மதுராந்தகம் - 603 306.*
தொலைபேசி எண். 252807

விலை. ரூ. 25–00.

# சேயூர் முருகன் திருப்புகழ்


| | |
|---|---|
| கவிஞர் | இளம்பூரணனார் <br> *(சி. து. கன்னிசாமி)* |
| வெளியீடு | திருவள்ளுவர் ஆண்டு 2034. |
| உரிமை | அமுதா கந்தசாமி பதிப்பகம் <br> மதுராந்தகம். |
| எழுத்து | 12 புள்ளி. |
| பக்கங்கள் | 50. |
| தாள் | 7.0 |
| நூலி. அ | டிம்மி |
| படிகள் | 1000. |
| கணினி அச்சு <br> அச்சிட்டோர் | மகேஸ்வரி கம்ப்யூட்டர் ஆப்செட் அச்சகம், கூனாம்பேடு. |
| நூல் விலை | ரூ.1 [illegible]-00. |

# சேயூர் திருமுருகன்



அமுதா கந்தசாமி பதிப்பகம்
31, மண்டபம், 2–வது தெரு,
மதுராந்தகம் – 603 306

# முன்னுரை

உ

திருவருள்

அம்மையப்பர் தங்கள் அருள்மகவாய் ஆனைமுகன்
விம்மி தங்கொள் பின்பிறந்த வேல்முருகன்–செம்மைநலச்
சேயூரான் வள்ளிதெய் வானையொடும் சேர்கந்தன்
நாயகன்சீர் போற்றிடுவோம் நன்கு.

பழம்பெரும் பதியான சேயூர் பழம்பெரும் புலவர்களால் புகழ்ந்து பாடப்பெற்றது. அத்திருப்பதியில் அம்மையப்பர், கணபதி திருக்கோயில்களுடன் அருள்மிகு கந்தவேள் திருக்கோயில் கலை நலம் திகழ அமைந்திருப்பது மிக்க சிறப்புடைத்தாகும், தெய்வத்திரு அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் திருமுருகன் திருவருட்சிறப்பை விளக்க வல்லதாகும். பிள்ளைத்தமிழ் போல வேறு பிரபந்தங்களும் இத்திருப்பதி படைத்துள்ளதாகும். அடியேன் சிறுவயது முதற்கொண்டே இத்திருப்பதியின் பெருமையில் என் நெஞ்சத்தை ஈடுபடுத்தி வந்துள்ளேன். சேயூர் பற்றிய பாடல்களை அடிக்கடி பாடி மகிழ்வதுண்டு. நாமும் சேயூர் முருகன் திருவடியை போற்றி பாடலாமே என்ற ஆர்வம் அடியேனுக்கும் பற்றாக என் உள்ளத்தில் அடிக்கடி எழுவதுண்டு. அதன்காரணமாகச் சேயூர் அந்தாதி என்றதொரு நூலை என் சிற்றறிவிற் கெட்டியவகையில் செய்து முடித்தேன். பின்னும் எழுந்த வேட்கையால் அருணகிரியார் மரபில் சில வண்ணக் கவிதைகளும் படைத்து மகிழ்ந்தேன். இப் படைப்புகள் மதுராந்தகத்திற்கு அடுத்த அருட்பெரும்குரவர் அழகரடிகளால் அமைத்த குருகுலத்திலிருந்து வெளிவரும் 'பொதுமறை' என்ற திங்களிதழில் தொடர்ந்து வெளிவந்தன. இவ்வரிய உதவியைக் காலத்திற்செய்த இந்நலம் திருக்குறள்பீடத் தலைவராயிருக்கும் தவத்திரு குருபழநி அடிகள் உதவியை மறத்தற்கியலாததாகும்.

இப்படைப்புகளை நூல்வடிவில் வெளியிடும் என்மருகர், செய்யூர் புலவர் வ. கந்தசாமி, என்மகள் க.அமுதாம்பிகை ஆகியவர்க்கும் உறுதுணையாக இருந்த மற்றவர்களுக்கும், என் மனமார்ந்த வாழ்த்துக்கள். சேயூர் முருகன் திருவருள் பெருக வேண்டுகின்றேன்.

அன்புடன்,

கவிஞர். சி. து. கன்னிசாமி,

(இளம்பூரணன்)

# பதிப்புரை

என் தந்தையார் அமரர் க. வடிவேலுப்பிள்ளை அவர்கள் அரசுத்துறையில் [டி.& ஈ. பிளாக்] புத்தூர், மேற்கு செய்யூர் கிராமக் கர்ணமாக பணியாற்றியவர் அருள்மிகு கந்தசாமியார் கோவிலில் மிகவும் ஈடுபாடு கொண்டவர். எங்கள் குடும்பமே செய்யூர் திருமுருகனின் அடியவர்கள்.

நானும் என் துணைவியார் திருமதி க. அமுதாம்பிகை ஆகிய இருவரும் 1970 முதல் ஓய்வுபெறும் வரை சொந்த ஊராகிய செய்யூர் அரசு மேல்நிலைப்பள்ளியில் பணியாற்றியதை திருமுருகன் திருவருள் எனப் பெருமையாகக் கருதுகின்றேன்.

எங்களுடன் செய்யூரில் இருந்த என் மாமனார் கவிஞர் திரு. சி. து. கன்னிசாமிப்பிள்ளை அவர்கள் அருள்மிகு கந்தசாமியார் பெயரில் திருப்புகழ், அந்தாதி ஆகியவைகளை இயற்றினார் செய்யூர் திருமுருகனுக்கு அணி செய்யும் இந்நூல் பலருக்கும் பயன்பட பதிப்பிக்க முன் வந்தேன் இந்நூலைப்படித்தோர் செய்யூர் திருமுருகன் அருளைப்பெற திருவருள் உதவும்.

இந்நூலை வெளியிட அனுமதிதந்த அருள்மிகு கந்தசாமியார் கோவில் அறங்காவலரும், பெருநிலக்கிழாருமான மதிப்புக்குரிய டாக்டர் திரு. செ. இரா. சுந்தரராசன் அவர்களுக்கு முதற்கண் நன்றியைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்நூலை வெளியிடத் தொகுத்து உதவி செய்தவர் எங்கள் மாணவர் முனைவர் திரு. அ. இராசேந்திரன் தமிழாசிரியர் அரசு மேல் நிலைப்பள்ளி செய்யூர் ஆவார். அன்னாருக்கு என் நன்றி உரித்தாகுக.

அணிந்துரை வழங்கிய புலவர். திரு. வல்லாளன் நிர்வாகி பாரதி ஆங்கிலப் பள்ளி சித்தாமூர் அவர்களுக்கும் என் நன்றி.

இத்திருக்கோவில் சிவாச்சாரியார் திருமிகு சந்திரசேகர் குருக்கள் அவர்களுக்கு என் நன்றி.

இறுதியாக இந்நூலை நன்முறையில் அச்சிட்டு உதவிய என் நண்பரும், தமிழாசிரியருமான புலவர். திரு. வ. சிவநேசன் மகேஸ்வரி அச்சக உரிமையாளர்க்கு என் நன்றி.

இந்நூல் விற்பனை வருவாயை அருள்மிகு கந்தப்பெருமாள் கோவில் திருப்பணிக்கே செலவிடச் சமர்ப்பிக்கின்றேன்.

31 மண்டபம் 2வது தெரு,<br>மதுராந்தகம் – 603 306.

என்றும் அன்புடன்<br>செய்யூர். புலவர். வ. கந்தசாமி.

# முன்னுரை

உ

திருவருள்

அம்மையப்பர் தங்கள் அருள்மகவாய் ஆனைமுகன்
விம்மி தங்கொள் பின்பிறந்த வேல்முருகன்—செம்மைநலச்
சேயூரான் வள்ளிதெய் வானையொடும் சேர்கந்தன்
நாயகன்சீர் போற்றிடுவோம் நன்கு.

பழம்பெரும் பதியான சேயூர் பழம்பெரும் புலவர்களால் புகழ்ந்து பாடப்பெற்றது. அத்திருப்பதியில் அம்மையப்பர், கணபதி திருக்கோயில்களுடன் அருள்மிகு கந்தவேள் திருக்கோயில் கலை நலம் திகழ அமைந்திருப்பது மிக்க சிறப்புடைத்தாகும், தெய்வத்திரு அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் திருமுருகன் திருவருட்சிறப்பை விளக்க வல்லதாகும். பிள்ளைத்தமிழ் போல வேறு பிரபந்தங்களும் இத்திருப்பதி படைத்துள்ளதாகும். அடியேன் சிறுவயது முதற்கொண்டே இத்திருப்பதியின் பெருமையில் என் நெஞ்சத்தை ஈடுபடுத்தி வந்துள்ளேன். சேயூர் பற்றிய பாடல்களை அடிக்கடி பாடி மகிழ்வதுண்டு. நாமும் சேயூர் முருகன் திருவடியை போற்றி பாடலாமே என்ற ஆர்வம் அடியேனுக்கும் பற்றாக என் உள்ளத்தில் அடிக்கடி எழுவதுண்டு. அதன்காரணமாகச் சேயூர் அந்தாதி என்றதொரு நூலை என் சிற்றறிவிற் கெட்டியவகையில் செய்து முடித்தேன். பின்னும் எழுந்த வேட்கையால் அருணகிரியார் மரபில் சில வண்ணக் கவிதைகளும் படைத்து மகிழ்ந்தேன். இப் படைப்புகள் மதுராந்தகத்திற்கு அடுத்த அருட்பெரும்குரவர் அழகரடிகளால் அமைத்த குருகுலத்திலிருந்து வெளிவரும் 'பொதுமறை' என்ற திங்களிதழில் தொடர்ந்து வெளிவந்தன. இவ்வரிய உதவியைக் காலத்திற்செய்த இந்நலம் திருக்குறள்பீடத் தலைவராயிருக்கும் தவத்திரு குருபழநி அடிகள் உதவியை மறத்தற்கியலாததாகும்.

இப்படைப்புகளை நூல்வடிவில் வெளியிடும் என்மருகர், செய்யூர் புலவர் வ. கந்தசாமி, என்மகள் க.அமுதாம்பிகை ஆகியவர்க்கும் உறுதுணையாக இருந்த மற்றவர்களுக்கும், என் மனமார்ந்த வாழ்த்துக்கள். சேயூர் முருகன் திருவருள் பெருக வேண்டுகின்றேன்.

அன்புடன்,

கவிஞர். சி. து. கன்னிசாமி,

(இளம்பூரணன்)

# பதிப்புரை

என் தந்தையார் அமரர் க. வடிவேலுப்பிள்ளை அவர்கள் அரசுத்துறையில் [டி.& ஈ. பிளாக்] புத்தூர், மேற்கு செய்யூர் கிராமக் கர்ணமாக பணியாற்றியவர் அருள்மிகு கந்தசாமியார் கோவிலில் மிகவும் ஈடுபாடு கொண்டவர். எங்கள் குடும்பமே செய்யூர் திருமுருகனின் அடியவர்கள்.

நானும் என் துணைவியார் திருமதி க. அமுதாம்பிகை ஆகிய இருவரும் 1970 முதல் ஓய்வுபெறும் வரை சொந்த ஊராகிய செய்யூர் அரசு மேல்நிலைப்பள்ளியில் பணியாற்றியதை திருமுருகன் திருவருள் எனப் பெருமையாகக் கருதுகின்றேன்.

எங்களுடன் செய்யூரில் இருந்த என் மாமனார் கவிஞர் திரு. சி. து. கன்னிசாமிப்பிள்ளை அவர்கள் அருள்மிகு கந்தசாமியார் பெயரில் திருப்புகழ், அந்தாதி ஆகியவைகளை இயற்றினார் செய்யூர் திருமுருகனுக்கு அணி செய்யும் இந்நூல் பலருக்கும் பயன்பட பதிப்பிக்க முன் வந்தேன் இந்நூலைப்படித்தோர் செய்யூர் திருமுருகன் அருளைப்பெற திருவருள் உதவும்.

இந்நூலை வெளியிட அனுமதிதந்த அருள்மிகு கந்தசாமியார் கோவில் அறங்காவலரும், பெருநிலக்கிழாருமான மதிப்புக்குரிய டாக்டர் திரு. செ. இரா. சுந்தரராசன் அவர்களுக்கு முதற்கண் நன்றியைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்நூலை வெளியிடத் தொகுத்து உதவி செய்தவர் எங்கள் மாணவர் முனைவர் திரு. அ. இராசேந்திரன் தமிழாசிரியர் அரசு மேல் நிலைப்பள்ளி செய்யூர் ஆவார். அன்னாருக்கு என் நன்றி உரித்தாகுக.

அணிந்துரை வழங்கிய புலவர். திரு. வல்லாளன் நிர்வாகி பாரதி ஆங்கிலப் பள்ளி சித்தாமூர் அவர்களுக்கும் என் நன்றி.

இத்திருக்கோவில் சிவாச்சாரியார் திருமிகு சந்திரசேகர் குருக்கள் அவர்களுக்கு என் நன்றி.

இறுதியாக இந்நூலை நன்முறையில் அச்சிட்டு உதவிய என் நண்பரும், தமிழாசிரியருமான புலவர். திரு. வ. சிவநேசன் மகேஸ்வரி அச்சக உரிமையாளர்க்கு என் நன்றி.

இந்நூல் விற்பனை வருவாயை அருள்மிகு கந்தப்பெருமாள் கோவில் திருப்பணிக்கே செலவிடச் சமர்ப்பிக்கின்றேன்.

31 மண்டபம் 2வது தெரு,
மதுராந்தகம் – 603 306.

என்றும் அன்புடன்
செய்யூர். புலவர். வ. கந்தசாமி.

## அணிந்துரை

பிரபந்த வித்தகர் பே.மு. வலல்லாளனார் எம்.ஏ., பி.எட்.,
ஒய்வு பெற்ற தலைமையாசிரியர், பொலம்பாக்கம்.

அருந்தமிழ் அறிஞர் சி. து. கன்னிசாமிப்பிள்ளை அவர்கள் (இளம்பூரணனார்) கண்டரச்சேரி என்னும் இயற்கைவளச்சூழல் அமைந்த ஊரைச்சார்ந்தவர். இவர் இக்காலத்தில் வாழும் தமிழ்ப்பேரறிஞர். பல நூல்களை முறையாகப் பயின்ற நூலறிவும், இயல்பாகவே இனிமையாகக் கவிதை புனையும் ஆற்றலும் அமையப்பெற்ற பெருமகனார்.

"மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை. என்ற குறளுக்கு எடுத்துக்காட்டாகத்திகழ்கின்றவர் என்று கூறலாம். இவர் படைப்புக்களில் புலமையின் ஆழத்தையும் பெருக்கத்தையும் நன்கு காணலாம். கலைவாணியின் அருள் இருந்தால்தான் கவி என்னும் ஊற்று சுரக்கும். சந்தங்கள் பெருக்கெடுத்து ஓடும். அப்படிவரும் வேகத்தோடே கற்பனையும் கலந்து வரும். அதுவே உண்மையான கவிதை எனலாம். அந்தவகையில் குருகுலக் கவிஞர் எனப் புகழ்பெற்ற இக்கவிஞர் ' சேயூர் முருகன் வண்ணக் கவிதைகள்' என்ற தலைப்பில் 13 பாடல்களைப் பாடியிருக்கிறார். மற்றும் சேயூர் அந்தாதி என்ற அந்தாதி நூலையும் இளம்பூரணர் என்ற பெயரில் பாடியிருக்கிறார்.

### சேயூர் முருகன் வண்ணக் கவிதைகள்

இந் நூலில் அமைந்த பாடல்கள் எல்லாம் அருணகிரி நாதரின் திருப்புகழ் சந்தங்களில் நடப்பன. சந்தப் பாடல்களைப் பாடுவது என்பது மிகக்கடினமான ஒன்று. அது கம்பியின் மேல் நடப்பதைப் போன்றது. குற்றெழுத்து நெட்டெழுத்தாகவோ நெட்டெழுத்துக் குற்றெழுத்தாகவோ மாறினாலும் அல்லது ஒரெழுத்து விடுபட்டாலும் பாடல் ஓசை முட்டி இசை முறிவு ஏற்படும் அத்தகையதான இசை தட்டாது அழகாகப் பாடியிருக்கிறார் நம் கவிஞர்.

வண்ணக் கவிதைகள் என்ற நூலில் கவிஞர் பல செய்திகளைப் பல்வேறு சந்தங்களில் குழைத்துத் தந்துள்ளார்.

ஒருகனியது பெற அரனொடும் உமையினை
உவகையில் வலம்வரும் – இறையோனே. என்றும்
பெருகுறு தமிழ்முனி கலையம துருளவோர் (1)
பெருநதி நிலமுற – அருள்வோனே. என்றும் விநாயகர் வணக்கத்தில் விநாயகர் மாங்கனி பெற்ற வரலாற்றையும் காவிரி உருவான கதையையும் நினைவு கூறச் செய்திருக்கிறார்.

பரிமளமேறு மரக்கர்கள் விறல்
முடிவேறு கரக்கிளை யாழ
பிசுவேறு சினத்தொரு கோலைச், செருகோனே! ( 4 )
என்று கந்தபுராண வரலாற்றையும்.

சக்கரம் விட்டு வானில்
அர்க்கனை மறைத்த போரில்
தத்துவ முரைத்த மாலின் — மருகோனே! ( 11 )

என்று கண்ணன் சக்கராயுதத்தை விட்டுக் கதிரவனை மறைத்ததையும், அருச்சுனனுக்குக் கீதை தத்துவம் உரைத்ததையும் சொல்லியிருக்கிறார்.

பரவை நற்றிரு கோப மொழித்திட
இரவினிற் றிரி தூதென வுற்றிடு
பரமர் மெச்சிட ஓதுமுரைப் பொருள்—உடையோனே! ( 8 )

எனச் சிவனார் சுந்தரருக்காகத்தூது நடந்ததையும், முருகன் தந்தைக்குப் பிரணவம் உரைத்ததையும் விளக்கிக் காட்டியிருப்பது மகிழ்தற்குரியதாகும்.

ஞாலமெலா மெனுமோர் நொடிப்போய்வரு
மாமயிலோய் நின — தருள்தாராய். ( 9 ) என்னும் இப்பாடலில் முருகனின் ஆற்றலையும் அவன் எங்கும் வியாபித்துள்ளவன் என்பதையும் கற்பவர் நெஞ்சில் ஆழப்பதியும்படி சொல்லியிருப்பது மட்டுமன்றி இணையிலா இறைவனாகிய நீ உலகை நொடியில் வலம் வந்தவன் அப்படிப்பட்ட நீ எனக்கு அருள்தருவது ஒன்றும் கடினம் இல்லை என்ற குறிப்பில் அருளை வேண்டுவதும் மனதிற்கு நிறைவை உண்டாக்குகிறது.

முடிவாகக் கவிஞர் அவர்கள் முருகப்பெருமானிடம் வேண்டும் வரமாக ஒருகருத்தைக் கூறுகின்றார். "பிறவிகள் என்னும் அலைகடலில் விழ்ந்து உழலும்யான் கரையேற உன்திருவடிகளை எண்ணி உருகும் எண்ணமாகிய வரத்தினை அருள்வாய்" என்கிறார். அதாவது பிறவிக் கடலைக் கடக்க முருகப்பெருமானின் திருவடித் தெப்பத்தை அருளவேண்டுகிறார்.

உழனு மாகனு பிறவிக ளெனும் அலை
பெருகு மாகட லதனிடை விழுமெனை
உனது தாள்மலர் உருகிட நினைவரம் — அருளாயே! ( 1 )

என்கிறார். திருக்குறள் அவதானியாகிய கவிஞர் "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார். இறைவனடி சேராதார்" என்னும் குறட்கருத்தை இங்ஙனம் மறுவார்ப்படம் செய்துள்ளமையை எண்ணி எண்ணி வியப்படைகின்றோம். இக்கருத்தையே கவிஞர் கூறும் நூற்பயனாகக் கொள்ளலாம்.

## சேயூர் முருகன் அந்தாதி

அந்தாதி என்பது தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களுள் ஒன்று. அந்தாதி நூலின் ஒவ்வொரு பாடலிலும் இறுதியில் உள்ள எழுத்து, அசை , சொல், சீர், அடி ஆகிய வற்றுள் யாதேனும் ஒன்று அடுத்த பாடலின் முதலாக வரும்படி அமைத்துப்பாடி இறுதிப் பாடலின் முடிவும் முதற் பாடலின் தொடக்கமும் ஒன்றாக இணையும்படி மண்டலித்து மாலை போலத் தொடுத்துப் பாடப்பெறுவது. இவ்வகையான அந்தாதிகள் வெண்பாவால் ஆயினும் கலித்துறையால் ஆயினும் நூறு பாடல்களால் அமைவதே பெருவழக்கினதாகும்.

இந்நூலுள் கவிஞர் அவர்கள் முருகப்பெருமான் ஐம் பூதம், பரிதி, மதி, கோள், நாள், சராசரங்கள், நன்மை, தீமை, உணர்வு ஆகிய எல்லாமாய் இருக்கிறான் என்பதைப்

பாராதி பூதம் பரிதிமதி கோளொடு நாள்
தேரும் சராசரங்கள் தீமை நலம் – சீருணர்வும்
எல்லாம் நம் சேயூர் எழில்முருகனே யல்லால்
சொல்லுதற்கு வேறுண்டோ சொல். (30) என்கிறார் மேலும்

அவனே மூலப்பொருள் என்று கூறுவதோடு வேறுண்டோ? என்று வினா விடுப்பது வேறு தெய்வம் இல்லை அவனே எல்லாவற்றிற்கும் அடிப்படையானவன் என்ற தன் உணர்வினை வெளிப்படுத்தியுள்ளார்.

சேயூர் முருகனை எண்ணினால் தீராத தீவினைகள் அனைத்தும் நம்மை விட்டோடும். நெஞ்சின் அறியாமை இருளும் நீங்கும் என்பதை

சென்றநாள் எண்ணியினித் தேம்புவதால் யாதுபயன்
குன்றுதோறாடும் குகப் பெருமான் – நன்றமரும்
சேயூரை எண்ணுவமேல் தீராத வினையனைத்தும்
போயோடும் நெஞ்சிருளும் போம். ( 10 ) என்கிறார்.

மக்களுக்குப் பக்தியென்றால் மான்தோல், தவப்பள்ளி, நீண்ட சடாமுடி, அக்கமணி, திருவெண்ணீறு பூசுதல் முதலியன கொள்வது பக்தியாகாது. ஆனால் ஆடம்பரமின்றி சேயூர் சென்று அவன்முன் நின்று கந்தாவென்று ஒரு முறை சொன்னாலே துன்பம் போய்விடும் என்று புற ஆடம்பரத்தை வெறுத்து பக்தியின் உண்மைத் தத்துவத்தை

மான்தோல் தவப்பள்ளி வார்சடைகள் அக்கமணி
ஆன்ற நீற்றுப் பூச்சால் ஆவதில்லை – தோன்று கழிச்
சேயூர்க்கந் தாவென்றே சென்றொருகாற் சொன்னாலே
போயோடும் துன்பம் புரண்டு (36) என்று இக்கவி மூலம்

விளக்கியுள்ளார் கவிஞர்.

மற்றும் 54, 57, 58, 59, 60, 62 ஆகிய பாடல்களில் சிலேடை அணிமூலம் பல கருத்துக்களை நயம்படக் கூறியுள்ளார் கவிஞர்.

கவிஞர் நெஞ்சறிவுறுத்தலாகச் சில சொல்கிறார்

"நெஞ்சே! "பின்வருவதென்னென்று பேணியறிவாரில்லை (22)
பேசிப் பிறர்தம்மைப் பின்சென்று வாழுமிதைக்
கூசுகிலாய் நெஞ்சே! நின் கொள்கை யீதோ" (25)
"நெஞ்சமே! உற்றதுணை நீயென்றே நானிருப்ப
வஞ்சித்தாய் ஐவர் வழிச்சென்றாய் (40)
"இனியாரை நம்பி இருந்திட்டாய் நெஞ்சே!
கனியிருப்பக் காய்கவர்வார் போல–மனிதர்களைப்
பாடியது போதுமினிப் பைந்தமிழ்ச்சே யூர்க்குமரன்
ஈடிலாச் சேவடியே ஏத்து." (74)

என்று நெஞ்சிக்கு அறிவுரைகளைக் கூறி முருகனிடம் நெஞ்சை ஆற்றுப்படுத்துவது அழகாக இருக்கிறது.

நூலின் இறுதியில்நூற்பயன் கூறியிருக்கிறார் நம் கவிஞர்

கனிந்து கனிந்துருகிக் கண்பனிப்ப நின்று
நினைந்துன் அடிபரவும் நேயம் – மனந்தழைவார்
எண்ணும் பதினாறு பேறுமெய்க் கீர்த்திகளும்
நண்ணுவார் சேயூரில் நன்கு. (101)

சேயூரில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமான் முன்னின்று அப்பெருமானை நினைந்து நினைந்து மனம் கனிந்து கனிந்து உருகிக் கண்களில் நீர்த்துளிக்க அவன் திருவடியை வணங்கும் அன்பர் தழைத்த மனமும் பதினாறு பேறுகளும் கீர்த்தியும் பெறுவர் என்கிறார். இப்பாடல் "நினைந்து நினைந்து" என்று வள்ளற் பெருமான் பாடிய பாடலை நினைவுக்குக் கொண்டு வந்து நெஞ்சை நெகிழவைக்கிறது.

கவிஞர் சொல்லழகு, பொருளழகு, தொடைநயம், சிலேடை போன்றவை கற்றார் நுகர்கனிகளாக விளங்குகின்றன. இந்தப்பக்தி நூல்களை நாள்தோறும் ஓதி அன்பர்கள் முருகன் அருளைப் பெற வேண்டுகிறேன்.

கவிஞர் அவர்கள் சமயப்பணியும் தமிழ்ப்பணியும் புரிந்து பல்லாண்டுகள் வாழ சேயூரானின் சேவடி போற்றி வணங்குகிறேன். வளர்க கவிஞரின் தமிழ்த் தொண்டும் சமயப்பணியும்.

இடம் சரவம்பாக்கம் சித்தாமூர். 603 313.

அன்பன்,
பேரம்பாக்கம் மு. வல்லாளன்.

முனைவர். அ. இராசேந்திரன், எம்.,ஏ., பிஎச்.டி.,
தமிழாசிரியர்,
ஈசுவரன் கோயில் தெரு,
செய்யூர் – 603 302.

## வித்தகராம் பெருங்கவியைப் போற்று நெஞ்சே!

சங்கத்தமிழ்க் கவிப்புலவர்க் கீடாய் நல்ல
சந்தக்கவி சிந்தைக்கவி நாளும் யாத்தே
இங்கித்தமிழ்த் தரணிதனில் என்றும் வாழும்
இலக்கணத்தில் பழுத்ததமிழ்ப் புலமை சான்ற
எங்கட்கவி கன்னிசாமி என்னும் தோன்றல்!
என்னிதயம் கவர்ந்திட்ட பண்பின் செம்மல்!
தங்கவியால் தமிழுலகில் தனக்கென் றான
தனித்ததொரு தமிழ்த்தொண்டால் உயர்ந்து நின்றார்.

எண்பத்தா றகவைதனில் இலகும் போதும்
தேகநலம் தளர்வுற்றுச் சோர்ந்த ஞான்றும்
அண்ணலவர் அப்பர்பிரான் போல ஈங்கே
அயராது தாம்கொண்ட குறிக்கோள் ஏற்றே
ஒண்டமிழின் மனவளத்தால் முதுமை நோக்கா
ஊக்கமுடன் உற்சாகம் மனதில் தேக்கி
எண்ணரிய இலக்கியங்கள் ஆய்ந்து கற்றே
எழுதரிய படைப்புகளைத் தமிழுக் கீந்தார்.

பண்ணலம்சேர் கலம்பகம், நற்பிள்ளைப் பாடல்
பாச்சுவைசேர் அந்தாதி, மாலை, தூதே
எண்ணத்தை எழுத்தாக்கும் காவி யங்கள்
எழுச்சிமிகு நாடகங்கள் என்று மேலும்
பண்பாட்டைப் பரிமளிக்கச் செய்யும் நோக்கில்
பல்கலையின் கழகங்கள் புகழ்ந்து பேச
வண்டமிழை வாரியென வழங்கும் எங்கள்
மாணுநலம் பெருங்கவியைப் போற்று நெஞ்சே

அம்பிகையை வழிபாட்டு அன்பைத் தேக்கி
என்னென்றும் அவளருளின் திறங்கள் பேசி
செம்மைநலம் திறம்பாத சைவம் போற்றி
திருநீற்று நெறியதனை வாழ்வில் ஏற்று
நம்மைசெழுந் திருக்குறளின் நெறிகட் கேற்ப
தகுதியாக்கி அறவாழ்வில் நிறைவே கண்ட
இம்மையிலே எவ்வுயிர்க்கும் தீங்கெண் ணாத
இளம்பூர ணரிந்நாட்டின் கவியின் வேந்தர்

இவர்பணியால் தமிழன்னைக் கணிகள் சேர
இளமைநலம் பாலிக்கும் பொலிவைப் பெற்றாள்!
தவப்பேற்றால் நாம்பெற்ற அறிஞர் கோமான்!
தன்மானத் தமிழ்மரபில் உதித்த மேலோர்!
பவமறுக்கும் பரம்பொருளை மனதால் போற்றும்
பக்திநெறி வழுவாத ஒழுக்க சீலர்!
இவரிந்த பூமியிலே மேலும் வாழ்ந்தே
செந்தமிழுக் கேற்றம்பல செய்தல் வேண்டும்!

சேயூரின் செவ்வேளை சிந்தை வைத்து
சாற்றியநற் பனுவல்களின் நயங்கள் ஓர்ந்து
வாயூறும் தமிழமுதம் பருகி மேலும்
முக்கனியை வெல்லுமின்பச் சுவையில் ஆழ்ந்தேன்!
தேனூறும் பூமாலை சூடும் பான்மை
தெய்வத்தமிழ் பாமாலை தொடுத்துச் சூட்டும்
தாயூறும் தலையன்பில் தகைமை சான்ற
தமிழவேள் திருவடியென் சென்னி யாமே'

இங்ஙனம்,
அ. இராசேந்திரன்.

# சேயூர் தல வரலாறு

## தலப் பெயர்

சேயூர் என்பது தமிழ்நாட்டில் செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள முருகன் தலம். இது இப்போது மதுராந்தகத்துக்குக் கிழக்கே 16 கல் தொலைவிலுள்ள ஒரு சிற்றூர். ஊர் முருகன் கோயிலால் பெயர் பெற்றது. தமிழ் இலக்கிய மரபில் சேய் என்பது முருகக் கடவுளைக் குறிக்கும். 'சேயோன் மேய மைவரை உலகம்' என்பதுதொல்காப்பியம். சேய் சிவபெருமான் சேயாகிய முருகன். முருகன் தழல் நிறத்தோடு தோன்றியவன் ஆதலால் சேய்; சேய்—செந்நிறமுடையவன்,சேயோன் தலம்—சேயூர் இது செய்யூர் என்றும் செய்கை என்றும் மருவி வழங்கும். சோழனுடைய திருப்பணிகள் கொண்டமையால் இது 'வளவ நகர்' என்னும் பெயரும் உடையது; திலையர்புரி என்றும் இலக்கியத்தில் பெயர் பெறுகிறது. தஞ்சை மாவட்டத்திலுள்ள சேய்ஞலூர் என்பது சேய் என்னும் பெயரோடு தொடர்புடையது. அது சண்டேசருடைய அவதாரத் தலம்; சம்பந்தர் தேவாரம் பெற்றது; சேய் நல்லூர்—சேய்ஞலூர்; சூர சம்மாரத்துக்காகச் சேயோன் ஆகிய முருகக்கடவுள் அங்கு எழுந்தருளி வந்து சிவபெருமானிடம் படைக்கலம் பெற்றார் என்பது அத் தல வரலாறு. சேயூருக்குத் தேவாரம் இல்லை.

சாசனங்களில் சேயூரானது சயங்கொண்ட சோழ மண்டலத்துச் செய்யூர்க் கோட்டத்துப் பிறையூர் நாட்டைச் சேர்ந்தது என்றும் அறிகிறோம். வீர ராசேந்திர சோழன் காலம் 1063 – 70. எனவே இத் தலம் பழமையானது.

இந் நூல் பல இடங்களில் செய்யூர் என்றே கூறும். இன்று உலக வழக்கும் செய்யூர் என்பதே இருப்பினும், சேயூர் என்று சொல்வதன் பொருட் பொலிவை நோக்கியும், அந்தகக்கவி வீரராகவர் தம் நூலைச் 'சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ்' என்றே கூறியுள்ளமையாலும், இந் நூற்பெயரும் 'சேயூர் முருகன் உலா' என்றே கொள்ளப்பெற்றது.

## முருகன் கோயில்

இது இங்குள்ள தனியான சிறப்புடைய கோயில். ஊரின் மத்தியில் அறுபது கஜ சதுரமான அளவில் அமைந்துள்ளது. சந்நிதி கிழக்கு நோக்கியதாயினும் கிழக்கு வாயில் உபயோகத்தில் இல்லை; தெற்கு வாயில்தான் வழக்கில் உள்ளது. வாயில் கோபுரம் இல்லை, முருகன் கருவறையின் மீது அழகிய பெரு விமானம் உள்ளது. எதிரில் நந்தவனமும் விநாயகர் ஆலயமும் உள்ளன; கோயிலில் வழக்கம்போல் சிவமும் சத்தியும் உள்ளனர்; திருநாமங்கள் சோமநாதர் மீனாட்சியம்மை முருகர் இங்குக் கருவறையில் ஏகமுகராகப் பெரிய வடிவில் தேவியரோடு உள்ளார்; நான்கு திருக்கரங்கள், உற்சவ மூர்த்திகள் தனித் தனிஇடங்களில் இருவர் உள்ளனர். உட்புறச் சபையில் உள்ள மூர்த்தி, நடராசர் போலத் திருவாதிரையில் உலாவுறப்பட்டுத் தரிசனம் கொடுப்பார். வெளிப்புறம் உள்ள பெரிய வடிவினரான மூர்த்தி முத்துக் குமாரசாமி, சம்மாரமூர்த்தி எனப்படுவார். இவர் சூர சம்மாரம் முதலான பிற உற்சவங்களில் எழுந்தருளுகிறார். தேர்த்திருவிழா ஐப்பசிசஷ்டியில் நடைபெற்றது. இப்போது நடைபெறவில்லைசந்நிதியில் மயிலுக்கு அருகே அந்தகக் கவி வீரராகவர் சிலை கும்பிட்ட கோலத்தில் உள்ளது. செப்பு வடிவமும் உள்ளது. பல இடங்களில் கோட்டங்களில் நிருத்தங்கந்நர் திருவுரு உள்ளது. பிரம்மசாஸ்தா என்ற நிலையில் ஒரு தனி முருகன் வடிவமும் உண்டு.

திருப்பணிகள் செய்து தேர்த்திருவிழாக்களை ஒற்றி கொண்டான் புதல்வர் கழுக்குன்றன் என்பவர் 1521இல் புதிதாகத் தேர் செய்து தொடங்கி வைத்தார். இதைத் தலப் பிள்ளைத்தமிழும் உலாவும் குறிப்பிடுகின்றன. கோயிலில் விழாக்கள் நடைபெற்ற சிறப்பை அருகிலுள்ள பொம்மைய பாளையம் சிவ ஞானபாலைய தேசிக சுவாமிகள்மீது நெஞ்சு விடு தூது பாடிய சிவப்பிரகாச சுவாமிகள் (17ஆம் நூற்றாண்டில்) தேசிகருடைய ஊர் சொல்லுமிடத்தில், சேயூரை அவருடைய ஊராகச் சொல்லி இங்கு எந்நாளும் விழாக்கள் நிகழ்ந்து வரும் செய்திகளைக் கூறுகிறார் - (199-200)

– நல்ல வளம்

மிக்கெலா நாளும் விழாவறா வீதியணி
திக்கெலாம் ஏற்றமிகு சேயூரும்

கோயிலுக்கு மேற்கில் செட்டிகுளம் என்னும் திருக்குளம் உள்ளது. இது திருமஞ்சன நீர் கொடுக்கிறது. செட்டி–முருகப் பெருமான். தைப்பூசத் தெப்போற்சவம் இங்கு நடக்கிறது. அன்றியும் கந்தர் சஷ்டி வேடுபறி உற்சவத்தில் முருகப் பெருமான் தினை மாவுண்டு தாகம் தீர்த்துக்கொண்ட நிகழ்ச்சி இங்கு நடைபெறுகிறது. பங்குனியில் பன்னிருநாள் பிரமோற்சவம் நடக்கிறது. பண்டைக்காலத்தில் திருக்கோயில் தளிப் பெண்டுகள் வள்ளி நாயகி திருமண நாடகத்தைக் கோயிலில் நடத்தி வந்தார்கள். ஆடி, கார்த்திகை, தை கிருத்திகையிலும், மார்கழித் திருவாதிரையிலும் விழாக்கள் நடைபெறும்.

## தல இலக்கியம்

தல சம்பந்தமான பாடல்களும் நூல்களும்பின் வருவன: அருணகிரி நாதர் பாடிய முகிலாமெனும் வார்குழலார் என்னும் திருப்புகழ்ப்பாடல்; அந்தகக்கவி வீரராகவமுதலியார் சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ் மற்றும் சேயூர்க் கலம்பகம் பாடியுள்ளார் சேறைக்கவிராசப் பிள்ளை சேயூர் முருகன் உலா பாடியுள்ளார்.

நன்றி
நூல் சேயூர் முருகன் உலா.



அருணகிரி நாதரின் சேயூர்த் திருப்புகழ்

முகிலாமெனும் வார்குழ லார்சிலை
புருவார்கயல் வேல்விழி யார்சசி
முகவார்தர ளாமென வே நகை புரிமாதர்

முலைமாலினை கோபுர மாமென
வடமாடிட வேகொடி நூலிடை
முதுபாளித சோலைகு லாவிய மயில்போல்வார்

அகிசேரல்கு லார்தொடை வாழையின்
அழகார்கழ லார்தர வேய்தரு
அழகார்கன நூபுர மாடிட நடைமேவி

அனமாமென யாரையு மால்கொள
விழியால்சுழ லாவிடு பாவையர்
அவர்பாயலி லேயடி யேனுடல் அழிவேனோ

ககனார்பதி யோர்முறை யோவென
இருள்காரசு ரார்படை தூள்பட
கடலேழ்கிரி நாகமு நூறிட விடும்வேலா

கமலாலய நாயகி வானவர்
தொழுமீசுர னாரிட மேவிய
கருணாகர ஞானப ராபரை அருள்பாலா

மகிழ்மாலதி நாவல்ப லாகமு
குடனாடநி லாமயில் கோகில
மகிழ்நாடுறை மால்வளி நாயகி மணவாளா

மதிமாமுக வாவடி யேனிரு
வினைதூள்பட வே அயி லேவிய
வளவாபுரி மேவியு லாவிய பெருமானே!

# சேயூர் முருகன் வண்ணக் கவிதைகள்

கவிஞர். சி. து. கன்னிசாமி ( இளம்பூரணர்)

### விநாயகர் வணக்கம்

காத்தளிக்கும் சேயூர்க் கணபதியின் பூங்கழல்கள்
ஏத்திடுவோர்க் கில்லை யிடர்

### வன்மீக நாதர்

மூவா முதலானார் முத்துவா ளிக்குகந்த
தேவான வன்மீகர் சேவடிகள் – நாவார
வந்தித் தினமுருகன் வண்ணக் கவிதைஇவண்
சந்தம் பெறப்படைப்பேன் சார்ந்து.

### முருகன்

சேயூர் முருகா சிவகுமரா நின்னடியை
வாயூரும் வண்ணக் கவிபாடிச் – சேயேனும்
பத்திமைகொண் டுய்யப் பரிந்தென் குறைபோக்கி
உத்திபெறச் செய்வாய் உவந்து.

### அருணகிரிநாதர்

அருண கிரிநாதர் அம்பொற் கழல்கள்
மருணிலவும் நெஞ்சுடையேன் வாழ்த்திப் – பொருணயங்கள்
வண்ணக் கவிதையிது வான்சேயூர்க் கந்தனடி
எண்ணிப் புனைவேன் இனிது.



# 1. விநாயகர் வணக்கம்

சந்தம் : தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன - தனதானா

1. ஒருகனி யதுபெற அரனொடும் உமையினை
உவகையில் வலம் வரும்- - - - இறையோனே!
உறுமொரு கதையினை முனிசொல எழுதிய
உணர்தரு மறிவினில் - - - - பெரியோனே

2.பெருகுறு தமிழ்முனி கலையம துருளவொர்
பெருநிதி நிலமுற - - - - அருள்வோனே
பிறையொடு மிதழியு மறுகொடு மலர்புனை
பெருகொளி சடிலம - - - - துடையோனே.

3. முருகனை ஒருகுற மகளவள் திருமண
முறவொரு கரியென - - - - வருவோனே
முதுகிரி கயிலையில் விசையொடும் அவையுற
முடிவில உதவிகள் - - - - தருவோனே.

4. திருவளர் வளவர்தம் புரமதில் முருகொடு
சினகர முறுகரி - - - - வடிவோனே
திருவடி யடியனு முறுமன மொடுதொழ
திருவரு ளுதவுக - - - - பெருமாளே.

---

1. கதை – பாரதம், 2. பெருநதி – காவிரி, சடிலம் – சடைமுடி 3.அவை – அவ்வையார் 4. வளவர்தம் புரம் – வளவாபுரி ( சேயூர்)

## 2 - இதுபோது மறவாதே

சந்தம் : தனன தனதான தனன தனதான
தனன தனதான - தனதானா

1. அருணகிரிபாடும் அழகு தமிழ்மேவும்
அமித அருண்ஞான - - அயிலோனே!
அவனி முழுதேகி ஒருநொடியுறாமுன்
அரன்ம கிழவோடி - - வருவோனே!

2. தாருண ஒளிவீசு மரகத மயூர்!
தழைசி றையசேவற் - - கொடியோனே
தயவு புரிவாயுன் திருவடி யினிழல்
தருதி யிதுபோது - - மறவாதே

3. பரனு லவுகோதை பணிமொ ழியினாசை
பயிலு மனமோடு - - படர்கூரப்
பகலிர வெனாது பயிலு முணர்வோடு
பசிய வனமீது - - பயில்வேளே!

4. கருணை மிகவாகி யெமையு மினிதாளக்
கடலி னலையூரு - - கழிநீரில்
கருது நிதிசேரு மழகுசேயுர்
கதிரி னொளி வீசு - - பெருமாளே!

---

3. பணிமொழி – வள்ளி நாச்சியார். படர் – துன்பம்
4. நிதி – உப்பாகிய செல்வம்

## 3. பாணாக வாழ்தற்குன் அருள்தாராய்

சந்தம் : தானான தான தன்ன தானான தான தன்ன
தானான தான தன்ன – தனதானா.

1. காலார்க வாமி வெற்பு போரூர்வி ராலி வெற்பு
காடேறு சோலை வெற்பு – முறைவோனே
காமாரி வாமி பெற்ற வேளாறு மாமுகத்த
காளாய்கு மார சிற்ப – வடிவோனே

2. நாவேறு சீல நற்சொல் நாடோறும் ஓதி நிற்கு
மாஞான வேதி யர்க்கு – நடுவோனே
நானாரெ னாவறிந்து நாகாச லாநினைந்து
நாலாறு மாறிரண்டு – மவைசூழப்

3. பாவான மாவ குப்பு நாவார ஓது நர்க்குப்
பாரோது பாத பத்மம் – அருள்வோனே
பார்மீதி லாரு மெச்சப் பாகான பாடல் செய்யிப்
பாணாக வாழ்வ தற்குன் – அருள்தாராய்

4. தேவார மூவர் அற்புதத் தேவான வாச கர்க்குத்
தேயாத வாழ்வ ளித்த – சிவபாலா
சேலேறு நீர்வ ளத்த சேயூரில் வாழ்வு பெற்ற
தேவாதி தேவ! நித்த! – பெருமாளே!

---

1. கால் – தென்றல்; காமாரி – சிவன்; வாமி – இறைவி
2. நாலாறும் ஆறிரண்டும் – தத்துவம் முப்பத்தாறு
3. பாணாக – பாடுபவனாகி
4. தேவார – – – – வாசகர் – சமயகுரவர் நால்வர்



# 4. அருட்புகழ் பாட அருள்வாய்

சந் : தனதான தனத்தன தான தனதான தனத்தன தான
தனதான தனத் தனதான — தனதனா.

1. அநுபூதி திருப்புக ழோதும்
அடியார்கள் மனத்துயர் தீரும்
அளவாத மருட்கட லான – அழகோனே!
அகமேறும் அவிச்சைய தான
கொடி தான மருட்சியி தேகி
அடியேனு னருட்புகழ் பாட – அருள்வாயே!

2. தினையேறு புனத்தினை நாடும்
கிளியேக இசைத்தமிழ் பாடும்
திருவாகு மெழிற்குற மாதுக் கினியோனே!
திருமார்பு கடப்பணி ஞானச்
செகமேவு புகழ்க் கொருவீரச்
செயவேல செழித்திடு சேவற் – கொடியோனே!

3. விளையேறு மரக்கர்கள் விழக்
குலமேறு சுரர்க்கிளை வாழ
மிகவேறு சினத்தொடு வேலைத் – தொடுவோனே!
விறல்சேரு தமிழ்க்கலை ஞானம்
நிறைவாக அகத்தியர் மேவும்
விதமோது கவிப்புல வாநற் – புகழோனே!

4. சினவாளை குதித்தயல் பாய
நெடுநீர்வ யலிற்களைநீவு
செழுமாதர் மிகுத்திடு நீளக் – கதைபேசித்
திருவேறும் இசைத்தமிழ் கூடும்
செயலேறு நகர்ப்பெரு சேயூர்
சிவனாரு முவப்புறு ஞானப் – பெருமாளே!

---

1. அவிச்சை – அஞ்ஞானம், மருட்சி – மனமயக்கம்
4. சிவனாரும் – உம்மை, உயர்வுசிறப்பு.

# 5. ஞானம் இசைந்திட அருள்வாய்

சந் : தனதானன தானதனந்தன தனதானன தானதனந்தன
தனதானன தானதனந்தன – தனதானா.

1. எமையாளுமை ஞான சவுந்திரி
இமையோரறி யாத பரம்பரை
இறையோனிட மேவுமி ளங்கொடி – யிகவாழ்வில்
இதமாகிய வேணவ ரம்பல
தருவாளமிழ் தானநெ டுந்தமிழ்
இவைகா ணென ஈயுந லம்பிகை – அருள்பாலா

2. தமையாருமொ வாத தவம்பெற
மிகுஞானியர் வீறுமுள ந்தனில்
தகுஞாயிறு போலவெ ழுந்திடு – சுடரோனே
தலமீதினில் யானுந லந்திகழ்
பவனாகியுன் பாதநி னைந்திடு
தகையேறிடு ஞானமி சைந்திட – அருள்வாயே

3. அமைநீடிய சாரலில் வந்திடு
கிளியோடிட நீளிசை பாடுமோர்
அழகார் குயில் ஆதர நாடிய – வருவோனே
அருணாபுரி கோபுர வாயிலில்
தமிழோடுயர் ஞனமு மோர்முனி
அமைவாகிட வேவர மீயுமொர் – அருளோனே

4. இமைதோயுக ணீரொடு பாதமு
நினைவாரவர் நீடிய வீடிவண்
இறைவாவரு ளாயென பாடுமொர் – இசைநீடும்
எழிலானசெ யூரினில் மாமயில்
இருமாதரொ டாரமு தாவரும்
இசையேறிடும் ஆறுமு காகுக – பெருமாளே

---

3. அழகார் குயில் – வள்ளி நாச்சியார்,ஓர் முனி – அருணகிரியார்.

# 6. மறவா திருக்கும் நிலை யருள்வாய்

சந்தம் : தனதான தத்தனன தனதான தத்தனன
தனதான தத்தனன — தனதானா.

1. திருவேர கத்தினொடு முரைசேர்தி ருப்பழநி
திருவேறு மெய்ப்பதிகள் — உறைவோனே!
செகமேல் திருப்புகழ்கள் சொலுவார் தமைக்குறுகு
செடிநோ யறப்பெரிதும் — அருள்வோனே!

2. ஒருவாச கப்பொருளை உணரাম லர்க்கமலம்
உறைவானை யச்சிறையில் — இடுவோனே!
உலவாந திச்சடில முடிசேர்மு தற்பொருளும்
உளமேவ செப்புமொழி — உடையோனே!

3. மருவார்பொ ழிற்குறவர் மடவாள வட்குருகி
மணிவேட மிட்டடவி வருவோனே!
மதவேழ மொத்திடுமென் மனவேக மற்றுநினை
மறவாதி ருக்குநிலை — அருள்வாயே!

4. உருவேறு முப்பளமொ டுரைசேர் புனற்கழனி
உலவாவ ளத்தகைமை — யுறுசேயூர்
உறுகோமி லுற்றமரர் பலகோடி சுற்றிநிதம்
உளமேறு பத்திமிகு — பெருமாளே!

---

1. செடிநோய் — கொடியநோய் 2. ஒருவாசகம் — பிரணவம்.



# 7. உனையே எண்ண அருள்வாய்

சந்தம் : தானத்தன தானன தானன
தானத்தன தானன தானன
தனதானன தானனதானன – தனதானா.

1. சேறைக்கவி ராசரு லாவொடு
நேருற்றிடும் அந்தக மாகவி
சீருற்றபி ளைத்தமிழ் நாடிய – புலவோனே!
சீதப்பொழில் சூழ் தரு காழியில்
நாதர்க்கிட நாயகி யாரருள்
தீதற்றிடு பாலெழு மோகையில் – மிசைவோனே!

2. மாறுற்றெழு தாருக னாதியர்
மோதிப்பொடி யாகிட வேமுனி
மாதுக்கநி வாரண வேலொடு – வருவோனே!
வானத்தெழு வாரண நீள்கொடி
மேலுற்றெழ வானவர் கோடிகள்
வாழ்வுற்றிட வேஅம ராவதி – புகுவோனே!

3. வீறுற்றப ராதமொ ராயிரம்
வீணிற்புரி மாயம னாதிகள்
வீடத்தொழு தேயுனை யேயென – அருள்வாயே!
வீடுற்றிட மாதவ யோகியர்
வேதப்பொரு ளாமுனை யேதொழ
மேதக்கதொர் சீரலை வாயினி – துறைவோனே!

4. தேறித்தினை மாவொடு தேனது
காலைப்பசி மாலது போயற
தேவிக்குற மாதிடு போதுள – மகிழ்வோனே!
சேறுற்றெழ நீடிய நீர்வயல்
சீருற்றிட ஒதுசெ யூருறை
சேவற்கொடி மேதகு வேலவ – பெருமாளே!

---

1. உலா – சேயூருலா பிளைத்தமிழ் – சேயூர் பிள்ளைத் தமிழ்
அந்தகமாகவி – கவிவீரராகவர்.

# 8. ஞானமதில் துளி யருள்வாய்

சந்தம் : தனத னத்தன தானத னத்தன
தனத னத்தன தானத னத்தன
தனத னத்தன தானத னத்தன – தனதானா

1. திருவ குப்பரு ளாருதி ருப்புகழ்
பெருவி ருப்பொடும் ஓதிடு மெய்த்தவர்
திருவ டிப்பணி யேசெயு நற்றவ – மெனவாழேன்
செருவி ளைத்தெனை நாளுந லித்திடு
வெகுளி முப்பொரு ளாடல்ஒ ழித்தினி
திகழு முப்பொழு தேயுமு னைத்தொழு – நிலை
தேறேன்

2. பரவை நற்றிரு கோபமொ ழித்திட
இரவி னிற்றிரி தூதென வுற்றிரு
பரமர் மெச்சிட ஓதுமு ரைப்பொருள் – உடையோனே!
பழதி செய்ப்பதி நீடுதி ருத்தணி
இலகு பொற்புடை ஏரக மொய்த்திடு
பழம லைப்பதி பாடியெ னத்திகழ்– முருகோனே!

3. தருவொ டுற்றப லாயிர மெய்த்திரு
உறும வச்சிர பாணிசி றைப்படு
தனைய றப்பொரு தோகைம யிற்றகை
– இளையோனே!
தவமி குத்தருள் சாரும கத்தியர்
உவகை பெற்றிட ஓதிடு முத்தமிழ்
தரும வற்புத ஞானம திற்றுளி – யருள்வாயே!

---

1. வெகுளிமுப்பொருள் – வெகுளியோடு கூடிய முப்பொருள் காமம், வெகுளி, மயக்கம்.
2. உரைப்பொருள் – பிரணவம்; செய்ப்பதி – வயலூர் பாடி – இருப்பிடம்.

4. பெருகு நற்புன லேரியு முப்பள
அருகி டைக்கழி நாடு முறப்பல
பெருமை பெற்றிடு மூரெனு நற்றவர் – உறைசேயூர்
பிடிந டைத்திரு மாமக ளக்குற
வனிதை யச்சுர நாடியெ னப்புடை
பிரிய மொத்திட மாமயி லுற்றிடு – பெருமாளே!

## 9. நினது அருள் தாராய்

சந்தம் தானன தானன தானன தானன
தானன தானன – தனதானா.

1. காலையி லேயெழு சூரிய னாயெமர்
காணவு லாவரு – மிளையோனே!

2. ஞாலமெ லாமெனு மோர்நொடி போய்வரு
மாமயி லோய்நின – தருள்தாராய்

3. வேலையி லேயெழு மாமுதல் வேரற
வேலது வீசிய – திறலோனே!

4. சீலமு ளார்தொழு தோருசெ யூரினில்
சேறையர் பாடிய – பெருமாளே!

---

4. சேறையர் – சேறைக் கவிராசர்



# 10.தாரை ஈவதுன் அருள்தானே

சந்தம் : தனத்தன தானன தான தானன
தனத்தன தானன தான தானன
தனத்தன தானன தான – தனதானா

1. திருப்புகழ் பாடியென் சேடி சூழ்தர
இருக்கும வேளையில் ஏறி மாமயில்
திருக்கும ரா தெரு வீதி நீவர – உணராதேன்!
செழித்திடு தோழியர் சேர ஏகியுட்
பெருக்கிடு மாசையில் காணு போதினில்
திருத்தகு நாணொடு போன மாமன – மறியேனே!

2. செருக்கினர் சூர்க்கிளை ஆவி போயறக்
குறுக்கிடு மோர்மலை தூள தாயிடத்
திருக்கையில் வேலது சீறியேகிட – விடுவோனே!
சிரித்தெரி யால்புரம் ஆவி யாயெழப்
படுத்திடு மாதியொர் பாக மாகிய
செகப்பெரு நாயகி பாலனேயறு – முகவேளே!

3. திருத்தணி யேரக மோர ணாமலை
விருப்பொடு சூழ்தரு வார தாசைகள்
சிறப்பொடும் ஈடுற வேந லாரருள் – புரிவோனே!
திருப்பெரு மாதவ ஞானி யாருள
மிகுத்திடு மோர்குர வாவெ னாருயிர்
திருப்பெற மார்பணி தாரை யீவது – னருள்தானே!

4. விருப்பினி லாடவ ரோடு மாதர்கள்
விருத்தர்கள் பாலர்கள் கோயி லேர்தர
மிகப்பெரு பூசைகள் நாளு மேதக – உறுசேயூர்
விழுத்தகு சோழர்கள் வேத நூன்முறை
தொடுத்தமை கோயிலில் தோகை மாருடன்
விருப்பொடு மாமயி லூர்தி மேவிய – பெருமானே!

---

2. சூர்க்கிளை – சூரபன்மா சுற்றத்தோடு, மலை – கிரவுஞ்சம்
ஆதி – சிவன், செகப்பெருநாயகி – இறைவி

4. தோகைமார் – வள்ளி தேவசேனை

# 11. அடிக்கண் ஏவல் புரிவேனோ

சந்தம் : தத்ததன தத்ததான, தத்ததன தத்ததான!
தத்ததன தத்ததான – தனதானா.

1. சத்தியெனு முத்துவாளி
முத்தரவர் புற்றிலீசர்
சற்குமர மிக்கஞானப் – பொருளோனே!
சக்கரம, திட்டுவானில்
அக்கதிர்ம றைத்தபோரில்
தத்துவமு ரைத்தமாலின் – மருகோனே!

2. அத்திருவ குப்புநாளும்
செப்புமடி யர்க்குவாழும்
அத்தகுசி றப்பொடாயுள் – அருள்வோனே!
அச்சிறுகு றப்பெணாளின்
மெச்சிடுவ னப்புநாடி
அப்புனம துற்றவேடன் – உருவோனே!

3. பத்தியொடு பத்ம பாதம்
முப்பொழு துரைக்குஞானப்
பற்றுளர்அ டிக்கணேவல் – புரிவேனோ!
பச்சொளிம யிற்கணேறிக்
குத்திரமி குத்தசூரன்
பட்டொழிய நெய்த்தவேலை – விடுவோனே!

4. சித்திகள்அ ளப்பிலாத
பெற்றவர டுத்துநாளும்
சித்தநிறை பத்தியோடு – வருசேயூர்
சிற்பமறு குற்றமாட
முற்றவுமு னைப்பராவு
செப்பொலி யிசைக்கவாவு – பெருமானே!

---

1. முத்துவாளி – சேயூர் அம்பிகையின் திருநாமம், புற்றிலீசர் – வன்மீகநாதர், தத்துவம் – கீதை
2. அகாரச்சுட்டுகள் – பண்டறிசுட்டு.

# 12. கூடிடு மாறொரு வரமீவாய்

சந்தம்: தான தன்னன தானன தானன
தான தன்னன தானன தானன
தான தன்னன தானன தானன — தனதானா

1. ஆவி நன்குடி சீரலை வாயொடு
நாடு செய்ப்பதி ஏரக மேவிடும்
ஆதி யந்தமி லாமுரு காவுனை — மறவேனே!
ஆத வன்பல ஆயிர கோடிகள்
மேவி னுந்திரு மேதகு சீரடி
ஆன தற்கொரு போதுமொ வாதநல் — ஒளியோனே!

2. கூவு மொண்குயி லாள்குற மாமகள்
கோல மெய்ச்சுர நாடவர் கோமகள்
கூடு நல்வழ காகும ராதிரு — முருகோனே!
கோது றும்பல வாதனை மேவிட
மீது றும்பல தீமைகள் போயிட
கோல ஒண்மயில் வாகன னேயருள் — பெறுவேனோ!

3. சேவை செய்துனை நாளினும் ஓதிடு
நாவ னம்பெறு வாரடி, யாரடி
தேடி யன்பொடு கூடிடு மாறொரு — வரமீவாய்
சீத ரன்மரு காசிவ ஞானமு
மேத கும்பல நூலுணர் வாதிய
தேறு தெஞ்சொடு தீரமு மேவிட — அருள்வாயே!

4. சேவ லொண்புகழ் மாமயி லாகியோர்
தீய வன்வரு மாறருள் கூர்தரு
தேவ நல்லரு ளாபுரி காழியில் — வருவேனே!
தேரு மெய்பது பூதியொ டோசைகள்
சேரு மொண்புகழ் ஓதிடு வார்பணி
சீல மெய்த்திரு வேறுசெ யூரமர் — பெருமானே!



# 13. அருள் புரிவாயோ

சந்தம் : தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன – தனதானா

1. உலக நாயகி உமையவள் மகிழ்தர
மழலை பேசிடு மிளமக வெனவரு
ஒருவ நாரண னரிதிரு வுளமகிழ் – மருகோனே!
உழலு மாசுறு பிறவிக ளெனுமலை
பெருகு மாகட லதனிடை விழுமெனை
உனது தாண்மலர் உருகிட நினைவர – மருளாயோ!

2. இலகு மோர்குற னெறியினி லுலகவர்
பெருகு வாழ்வினி லுயர் திற மவையுணர்
இருமை மாநலம் எளிதினில் பெறவருள்– புரிவாயோ!
எவரு மோர்குலம் உடனுறு பிறவியர்
நொதும லாரயல் இலையிலை எனமனம்
இசைய வாழுமொ ருயர்வர மதுதக – இசைவாயோ!

3. நிலவு லாவிய சடையவ ருளமகிழ்
உறுமொர் ஞானமொ டுயர்பொரு ளதுதனை
நிகழு மாறவர் செவிதனி லுரைசெயும்– உரவோனே!
நெடுந லாரண முனிசொலு முறையினில்
ஒழுகி ஆடலில் வளசுரர் வடிவொடு
நிகழு மோர்பகல் குறமக ளிசைபெற – வருவோனே!



4. கலப மாமயில் முதுகினி லெறிகதிர்
சுலவு ஞாயிறு வடிவொடு மடியவர்
கருது மோர்வர மருளிய வருதிரு – முருகோனே!
கழியு லாவுறு செயலெழ விளைவுயர்
வளவ மாபுரி யடியவர் தொழுதெழு
கருணை வேலவ அறுமுக அழகிய – பெருமாளே!

---

2. நொதுமலார் – அயலவர் 3. ஆரணமுனி – நாரதர்,
ஆடலில் – திருவிளையாடலாக, வனசரர் – வேடர்
4. சுலவும் – வீசும், வளவமாபுரி – சேயூர்

## காவடிச் சிந்து

1. சேயூரில் வாழ்சிவ மைந்தனே என்றன்
தீவினை போக்கிடும் கந்தனே – கடற்
செந்தில் ஏரகம் ஆவிநன்குடி சீர்திருத்தணி யோடு
செய்ப்பதி
சேர்ந்துறை வாயெங்கள் ஐயனே – உன்றன்
சேவடி தந்தருள் மெய்யனே (சேயூ)

2. தாயென ஞாலங்கள் தந்தவள் சிவ
சங்கர னார்பங்கில் நின்றவள் – ஒரு
தைய னாயகி பாலனா யமுதுண்டு சால மகிழ்ந்து
வாழ்திரு
சண்முக னேமயில் வாகனா தரு
சாரும் தெய் வானையின் மோகனா (சேயூ)

3. வேடுயர் கானக மீதிலே – ஒரு
வேடுவ னாய்ச்சென்ற போதிலே – குற
வித்தகச்சிறு மான்வி ழிச்சிதன் முத்தவாணகை
உள்ளுருக்கிட



வேலவ னேதுதி பாடினாய் அண்ணன்
வேழம தாய்வரத் தூண்டினாய் (சேயூ)

4. மாயவன் போற்றும ருகனே – பச்சை
மாமயி லேறுமு ருகனே – அந்த
வானவன் சிறைவீடு தந்தவன் வாழுமா றருளே
புரிந்திடு
வாரண மாமுகன் பின்னவா ஆறு
மாமுக னாகிய விண்ணவா (சேயூ)

5. தீயவன் சூரபன் மாவொடும் அவன்
சேரும் கிளைமுதல் யாவரும் – பொரு
செங்களந்தனில் மங்கி வீழ்தர சேணி லும்மவர்
ஓலமோர்தர
சீறியோர் வேற்படை தொட்டவா – சுரர்
சிந்தையி லேமகிழ் நட்டவா (சேயூ)

6. மீயுயர் ஐம்புல வேதனை – தனை
விட்டுனை மேவிடு சாதனை – இந்த
மேதி னித்துய ரான போயிட வீடு பெற்றடி
யேனும் வாழ்ந்திட
வேலவ னேயருள் காட்டுவாய் இந்த
வீணனுக் குந்துயர் ஓட்டுவாய் (சேயூ)

முற்றும்.



# சேயூரந்தாதி

கவிஞர் – இளம்பூரணன்

## காப்பு

மாயூரன் செவ்வேள் வடிவேற் குகன்கந்தன்
சேயூரந் தாதியிவண் செப்புதற்குத் – தூயவொளிச்
சித்தி விநாயகனெம் சிந்தைமலர்க் காவளரும்
அத்தியடி போற்றிடுவே மால்.

## நூல்

1. சீரார் செழுமழலைச் சேயாய் இறைவற்கும்
பேரார் பொருளுவலும் பெம்மான்செய் – ஏரார்
திருமாண் நலங்களுறும் சேயூரில் நின்றான்
அருகா தருள்புரியு மாறு.

2. ஆறாறு தத்துவமும் ஆய்ந்துண்மை கண்டறிந்து
பேறாகக் கூர்ந்துரைக்கும் பெற்றியரும் – தேறுநிலை
ஆதார மாய்ப்புகல்வார் ஐயன்சே யூர்க்கந்தன்
பாதார விந்தத்தின் பண்பு

3. பண்புணர மாட்டாதேன் பாவித் துனைநெஞ்சில்
எண்புணர ஏத்துவரம் ஈந்தருளாய்! – கண்புணரு
நெற்றிக் கனிதந்த நின்மலனே! சேயூரெங்
கொற்றவனே! நெஞ்சிரக்கம் கொண்டு.

4. கொண்டல முருங் கொழுவேறி யங்கயல்கள்
விண்டலம் பாயும் விறற்சேயூர் – பண்டுவந்த
எம்மான் முருகன் எழிற்பழநி யோரகத்தான்
அம்மான் புகுந்தான் அகம்.

5. அகம்புரியும் அன்பினேம் ஆகி யகந்தை
அகன்றினிய கந்தன் அருள்கள் – தகவுணர்ந்த
நெஞ்சினேம் ஆகி நிலவுதிருச் சேயூரே
தஞ்சமென நின்றேம் தழைத்து.

6. தழைத்த புலப்பகையைத் தாம்வெல்ல வேண்டின்
பிழைத்தநாள் சென்றிடநம் பேறா – உழைக்கரத்தான்
தந்தமயில் வீரன்றன் தாள்பணிவோம் சேயூரில்
அந்தமிலா இன்பங்கள் ஆர்ந்து

7. ஆர்ந்த புகழருணை யண்ணல் அலங்காரம்
தேர்ந்த திருப்புகழ்கள் செப்பியே – வார்ந்தபுகழ்
உப்பளத்த சேயூரில் உற்றாரைக் கூற்றுவனார்
தப்பியும் தீண்டாரிஃ தாம்

8. தாமங் கடம்புரியும் ஐம்புலநோய் சாய்க்கவெனில்
தாமங் கடம்பணியும் சண்முகனைத் – தாமங்கா
அந்தாதி சொல்லி அழைத்திடுவோம் சேயூரிற்
கந்தா எனத்துதிப்போம் கண்டு

9. கண்டீ ரவமிந்தக் காசினிவாழ் வென்றறிந்தும்
கண்டீ ரவநெறிகள் காதலித்தே – புண்டாழு
நெஞ்சோ டினியிருக்க, வேண்டாநீர் சேயூரில்
செஞ்சே வலனினைவீர் சென்று

10. சென்றநாள் வீண்படவே தேய்ந்தவெலாம் எண்ணிமிகக்
குன்றினால் ஏதொன்றும் கூடாதால் – என்றூழ்
எனவிளங்கு வேலேந்தும் எம்மான்றன் சேயூர்
தனைவிளங்கப் பாடுகம்யாம் சார்ந்து

11. சார்ந்தார்க் கருணர்கும் சங்கரனார் தம்மகனை
ஈர்ங்கழியார் சேயூரில் எம்மானைத் – தேர்ந்தவிசைப்
பாட்டலங் காரத்தாற் பாடினார் தம்பிறவி
ஓட்டும் திறம்பெறுதல் உண்டு

12. உண்டான போதினிலே உற்றார் உறவினர்கள்
தண்டாது சூழ்வர் தனமின்றேல் – கண்டாலும்
பேசார் இதுவறிக பெம்மானெம் சேயூரான்
தேசறிதல் ஒன்றேநம் சீர்

13. சீரலைவாய் தென்பழநி ஏரகம் சோலைமலை
தேரும் திருப்பரங் குன்றமொடு – பேருலவாக்
குன்றுதோ றாடுங் குமரவேள் சேயூரே
தன்றரணி யாக்கொண்டான் சார்ந்து

14. தரணிவேற் கந்தன் தருவெனவே யிந்தத்
தரணிபுகழ் சேயூரில் தங்கித் – தரணியெனும்
நம்வினைகள் போயகல நல்குவான் என்றறிந்தும்
எம்முளமே ஏத்தாத தென்?

15. தென்னரவென் றேவண்டர் தென்மழலைத் தேன்சிந்தும்
தென்பரங் குன்றமரும் தேவர்பிரான் – இன்றெனக்குச்
சேயூரில் தன்கழலைச் சேவிக்கு நல்லருளைத்
தாயாக வந்தளிப்பான் தான்

16. தாயாக வம்பரியும் ஐம்புலப்பேய் தம்மையினித்
தாயாகு நீயல்லால் சாய்ப்பாரார்! – சேயூர்வாழ்
நாகணையான் றன்மருகா நல்லமரர் வாழ்வளித்த
தோகைமயி லாவகத்தே தோன்று

17. தோன்றுவாய் என்றகத்தைத் தூய்தாக்கி யன்புமலர்
ஆன்ற பரப்பி அழகாக்கி – ஏன்றவகை
செய்தமைத்தேன் சேயூரா! சேவற் கொடியுடைய
அய்யா விரைந்தருள்க ஆங்கு

18. ஆங்குன்னைப் பாடும் அருணகிரி தம்அடிகள்
பாங்கிற் பரவிடுவேன் பாவித்து – நீங்காவென்
பத்திமை கண்டே படிபுகழும் சேயூரில்
அத்தா அருள்புரிதல் அன்பு

19. அன்பகத் தில்லானே ஆயிடினும் நின்புகழ்நூல்
என்றும் இசைக்குமிதை எண்ணியே – நின்றதொரு
நல்லருளால் ஏழையடி யேனுக்கும் நல்கிடுவாய்
எல்லொளிவேற் சேயூரா இன்று

20. இன்றென் இடர்யாவும் நீங்கி யிணையடிகள்
குன்றாத சீர்த்தியெலாம் கூறுதற்கு – நன்றாகும்
வேலா வரந்தருவாய் வெண்கழிநீர்ச் சேயூரிற்
சீலா இதுவுன்றன் சீர்

21. சீரகத்தே நின்றுயரும் செங்கரும்பைத் தேனாக
ஏரகத்தே நின்றினிக்கும் எம்மானைத் – தாரகமாம்
ஆறெழுத்தும் சொல்லி அழைத்திட்டேன் சேயூரில்
பேறெனவே கண்டுவந்தேன் பின்

22. பின்வருவ தென்னென்று பேணியறி வாரில்லை
என்னிலையும் ஆறுமுகன் எண்ணமதால்–மன்னுவதே
என்றறிக நெஞ்சே! இனித்தாழாய் சேயூரில்
நின்றகுகன் பாதம் நினை!

23. நினைவும் தொழுகையும் நீள்செயலும் சேயூர்
முனைவன் முருகனடிக் காக்கித் – தினமுழுதும்
நன்னெறிக்கண் செல்வாரை நாளுங்கோ ளும்பிறவும்
என்னதான் செய்யும் இனி!

24. இனியவனாய்த் தேவர் இடுக்கண் தவிர்ப்பான்
முனையசுரர் ஆற்றலெலா முற்றத் – துணைவினிலே
நீறாக்கும் செவ்வேள் நெடுவயலார் சேயூரிற்
பேறாவான் சேவடியே பேசு!

25. பேசிப் பிறர்தம்மைப் பின்சென்று வாழுமிதைக்
கூசுகிலாய் நெஞ்சேநின் கொள்கையிதோ! – சீ சீ நீ
விட்டொழியிக் கீழ்மையினைச் சேயூர் நம் வேலவன்சீர்
உட்டெளிவாய்ப் பேசல் உயர்வு

26. உயரும் அருணகிரி ஓதுமலங் காரம்
துயர்கெடநின் றோதுமவர் துன்பம் – பெயரொழியச்
சென்றோட லேயுறுதி சேயூர்க் குமரனருள்
என்றுமே பொய்ப்பதிலை ஈங்கு

27. குன்றாப் புலவர்சிரம் கொண்டேத்தும் அந்தகர்சீர்
நன்றாம்பின் னைத்தமிழின் நற்சுவைகள் – இன்றே நீ
சென்றுணர்க நெஞ்சமே! சேயூர் வரதனருள்
குன்றாச் செழுந்தமிழாற் கூறு

28. கூறும் பிரணவத்தின் கொள்கையினைத் தந்தைக்கும்
தேற உரைக்கும் சிவபாலன் – தேறிடவெம்
சிந்தை மயக்கொழிக்கும் சிந்தைநலத் தாற்சேயூர்
வந்தமர்ந்தான் போலு மகிழ்ந்து

29. மகிழ்ந்தி மடநெஞ்சே! வள்ளி மணாளன்
சிகியூரும் எந்தையினைச் சேயூர்த் – தகுகோயிற்
சந்நிதியிற் கண்டு தமிழிசையால் போற்றினமால்
பன்னலமும் பெற்றுயர்வோம் பார்!

30. பாராதி பூதம் பரிதிமதி கோளொடுநாள்
தேரும் சராசரங்கள் தீமைநலம் – சீருணர்வும்
எல்லாம்நம் சேயூர் எழின்முருக னேயல்லால்
சொல்லுதற்கு வேறுண்டோ சொல்!

31. சொல்லிலே தேனூறும் சொல்லலங்கா ரம்புகழ் நூல்
நல்லவகுப் பந்தாதி நற்றமிழால் – கொல்லைத்
திருமருத நெய்தலுலாம் சேயூரிற் கந்தன்
திருவடிகள் சேவிப்போம் சென்று.

32. சென்றநாள் எண்ணியினித் தேம்புவதால் யாதுபயன்
குன்றுதோ றாடுங் குகப்பெருமான் – நன்றமரும்
சேயூரை எண்ணுவமேல் தீரா வினையனைத்தும்
போயோடும் நெஞ்சிருளும் போம்.

33. நெஞ்சிருளால் ஏதோ நினைவதூஉம் செய்வதூஉம்
விஞ்சி வினைபெருக்கல் விட்டொழிவோம் – தஞ்சமினிக்
கொஞ்சுகுயில் வள்ளி கொழுநன்றன் சேயூரே
செஞ்சொலால் பாடுகம்யாம் சேர்ந்து

34.. சேர்ந்தார்க் கிடுக்கண்கள் தேய்ந்தொழிதல் திண்ணங்காண்
பேர்ந்தார் பிறவியிதில் பேதுறுவர் – தேர்ந்தறிவின்
ஆர்ந்தார் அகமகிழும் சேயூரில் ஆண்டவனை
ஈர்ந்தமிழால் பாடிடுவோம் ஈங்கு.

35. ஈங்குநஞ் சேறைக் கவிராசர் இன்றமிழால்
காங்கேய னுக்குவந்து கண்டசுவை – ஓங்குலா
நூலின் பயன்தேர்க நோன்மைபெற லாம்சேயூர்க்
காலா யுதனைக் கருது

36. கருதுவார்க் காற்ற எளியனம் கந்தன்
திருவடிகள் சேயூரிற் சென்றே – திருவகுப்புப்
பாமாலை நெஞ்சுருகப் பாடிப் பரவுதுமேல்
யாமெவர்க்கும் மேலாவோம் இன்று

37. மேலாக வந்தனிலே மேன்மோதி வந்தெதிர்த்த
காலாயுத மயிலைக் கைப்பற்றிச் – சீலம்
கொடியூர்தி யாக்கொண்டான் கூத்தன் குமரன்
வடிவழகன் சேயூரெம் மான்

38. மான்றோல் தவப்பள்ளி வார்சடைகள் அக்கமணி
ஆன்றநீற் றுப்பூச்சால் ஆவதிலை – தோன்றுகழிச்
சேயூர்க்கந் தாவென்றே சென்றொருகாற் சொன்னாலே
போயோடும் துன்பம் புரண்டு.

39. புரண்டு நாள் அத்தனையும் போயினவே வாழ்வில்
அரண்டருவார் யாரென் றழுங்கேல் – குரண்டநீர்ச்
சேலுக்கா வந்துலவும் சேயூரிற் கந்தனுளான்
மாலினியென் நெஞ்சே மகிழ்!

40. நெஞ்சமே உற்றதுணை நீயென்று நானிருப்ப
வஞ்சித்தாய் ஐவர் வழிச்சென்றாய் – கிஞ்சித்தும்
சிந்தித்த துண்டோ! திருந்தியினிச் சேயூரில்
வந்தமரும் வள்ளலடி வாழ்த்து

41. வள்ளல் முருகன் வரந்தரவே சேயூரில்
உள்ளமுவந் தேயிருப்ப தோராமல் – துள்ளலையில்
செத்தைபோல் நாளும் திகைத்தலைந்த தென்னேயான்
பத்திமையின் பாங்கறியா தேன்!

42. தேனாடி வண்டு சிறகுலர்த்தும் சேயூரில்
வானாடர் கோவும் வழிபடவே – தீனர்களுக்(கு)
ஆதரவாய் நின்றான் அருட்குமரன் ஐங்கரனார்
காதற் றுணைமையிலோன் காண்.

43. காண்பார்தம் நெஞ்சினிக்கும் கற்கண்டே! முக்கனியின்
மாண்சுவையே தேன்மணக்கும் வானமிர்தே! – சேணொளிசேர்
செங்கதிரே! சேயூர்ச் செழுமயின்மேற் செவ்வேளே!
இங்கெமைக்கா இன்னருள்கள் ஈந்து

44. துலையதனிற் பாவச் சுமைதாழ நன்மை
நிலையதுமேல் சென்றிடவு நின்றேன் – இலைவேற்கை
எம்மானே! சேயூர் இளமுருகா! இப்பிறவி
செம்மையுறச் செய்தருள்க சேர்ந்து!

45. சேர்ந்தேனின் நாமம் செபித்தேன் திருப்புகழ்கள்
ஓர்ந்து மகிழ்சிறக்க ஓதினேன் – ஈர்ங்கடம்பொன்
செம்மலர்கள் சூட்டியுனைச் சேவித்தேன் சேயூரில்
அம்மான்! மகிழ்ந்தேன் அகம்

46. அம்மான் மருகனொளிர் அம்மான் கரத்தேந்தும்
அம்மான் திருக்குமரன் ஆறுமுகப் – பெம்மான்
கழனிவள வாபுரியில் கண்கண்ட தெய்வம்
பழவினைகள் தேய்த்தொழிப்பான் பார்த்து

47. பார்த்தெழுபா ரண்டம் பதைபதைக்கச் செய்துலவும்
சூர்ப்புயலை ஓட்டும் சுடர்ப்பரிதி – கார்த்திகையர்
கண்ணானான் எம்வினைகள் சுட்டறுக்கச் சேயூரின்
கண்ணானான் கந்தனவன் காண்!

48. காணியா இவ்வுடலம் காதலித்துப் பாழுக்குப்
பேணியே நீரிறைத்துப் பேதையேன் – வீணிலே
சென்றநாள் எண்ணிச் சிதையாமல் சேயூரா!
வென்றிகொளச் செய்வாய் விரைந்து

49. வென்றி நடைபோடும் வெம்புலன்கள் நாற்கரணம்
என்றென் வழிவருமோ எங்கோவே! – துன்றுபொழிற்
சேயூரா தம்வழியே செவ்விதெனப் பாழ்நெறிக்கே
பாயுமவை தாம்திருந்தப் பார்!

50. பார்முதிரும் பைங்கடலில் பாய்ந்துழக்கி அன்றெதிர்ந்த
சூர்முதலைக் காய்ந்த சுடர்வேலோய்! சேர்கடப்பந்
தாரா! நம் சேயூர்த் தனிமுதலே நின்னடிக்கண்
பேராநெஞ் சேயெனக்கோர் பேறு

51. பேறுதவ வாழ்வோரும் பெண்குலனும் நான்மரபிற்
றேறுமனச் செவ்விதிகழ் சேயூரே! – நீறு
படமும் புரமெரித்த பண்ணவன்றன் சேயாம்
கடவா ரணத்துணைவன் காப்பு

52. புக்ககத்தில் மாதர்களும் புங்கவரும் தம்நெறிசேர்
சொற்காத்துச் சோர்வுதவிர் சேயூரே – பொற்புநலம்
இல்லாவென் புன்கவிக்கும் இன்னருள்கள் செய்தெனையாள்
வெல்வேலான் மேவியமர் ஊர்

53. ஊர்திரும்பும் ஆன்குலனும் ஒன்மொழியார் பூங்கரமும்
சீரொலியாற் கன்றமரும் சேயூரே – தேர்வரிதாம்
ஒண்பொருளைத் தந்தைக்கும் ஓதிமகிழ் வானிரண்டு
பண்மொழியார் பாகனருட் பற்று

54. பற்றிப் படர்கொடியும் பாலருந்தும் பாலகரும்
சுற்றித்தாய் சூழ்ந்துவரும் சேயூரே – எற்றைக்கும்
பற்றாக நின்றான் பழநியம் போரூரான்
உற்றொளிரும் வேற்கந்தன் ஊர்

55. உற்றதவ ருள்ளகமும் உப்பளஞ்சேர் பாத்திகளும்
கற்புரத்தின் காட்சிசெறி சேயூரே – நற்றவத்தின்
எண்ணுவார் நெஞ்சகத்தே இன்றேனாம் ஆறிரண்டு
கண்ணுடையான் கந்தனவன் காப்பு

56. கந்தமலர்ச் சோலையினும் காரிகையார் கைம்மலரும்
வந்தமரும் வண்டொலிக்கும் சேயூரே – எந்தை
பரங்குன்றன் செந்திலான் பண்ணமர் செங்கோடன்
தரங்குலவு கந்தனெந்தை சார்வு

57. சாரும் அடியவரும் தண்வயல்சேர் நெற்பயிரும்
தேரும் தலைவணங்கும் சேயூரே – வாரம்
செறியு மனத்தான் செறுவயலூர் செந்தில்
வெறிபூங் கடம்பன் விருப்பு

58. பூங்கோதை யார்கரமும் புண்ணியரிற் கொட்டில்களும்
தாங்கோ தனம்பெருக்கும் சேயூரே – ஆங்காரம்
அற்றார்க் கருள்புரியும் ஆறுமுகன் முப்புரங்கள்
செற்றார் திருமகனார் சேர்வு

59. சேருமடி யாரறிவும் செய்யகரும் பின்பிழிவும்
தேரும் சுவைமலியும் சேயூரே – தேரா
அறிவிலியென் போன்றார்க்கும் ஆக்கமெலாம் செய்யும்
அறுமுகவன் கந்தனிடம் ஆம்

60. அறுபதங்கள் ஆடல்களும் ஆயிழையார் பேச்சும்
நெறிகா மரநிலவும் சேயூர் – வெறிமலர்க்காச்
செங்கோட்டு வேலன் செழுமதுரை யங்கயற்கண்
மங்கைமகன் மன்னுபெரு வாழ்வு

61. மன்னுழவர் நல்லுளமும் மாண்கவிஞர் பாக்களினும்
சொன்னலமே சூழ்ந்துயரும் சேயூரே – பன்னகமா
கங்கணத்தெம் அம்மையவள் கண்ணானான் நற்றணிகை
தங்குசுவைத் தேனாவான் சார்வு

62. தேனாடு பூவினிலும் தேமொழியார் சொற்களினும்
கானங் கலைதிகழும் சேயூரே – தீனர்கடாம்
ஈடேறச் செந்தூர் வயலூர் எழிற்பழநி
வீடாக நின்றான் விருப்பு

63. நின்றதெங் கம்பழனு நீண்டதவத் தோர்வினையும்
சென்றுதிர்ந்து சேண்மணக்கும் சேயூரே – கன்றமரும்
கையாள் எமையுடையாள் காதலிளஞ் சேய்முருகன்
வையா புரியான்றன் வாழ்வு

64. உந்துதவச் சித்தியரும் வாணிபங்கள் ஓம்புநரும்
வந்துமறு கூட்டடையும் சேயூரே – வந்திப்பார்
சேர்தணிகை ஏரகமும் செந்தில் திருப்போரூர்
ஏர்தருசெவ் வேளவன்றன் ஏற்பு

65. ஏருழுநர் மாட்சியதால் ஏந்திழையார் இல்லறத்தால்
சீரளிக்கும் சொல்லுயரும் சேயூரே – சாரமிகத்
தெய்வத் திருப்புகழால் சேவிப்பார்க் கென்றுமருள்
செய்யும் திருமுருகன் சேர்வு

66. செய்யமரு நாரைகளும் சேர்வான நூலோரும்
எய்துமீன் ஏற்றமறி சேயூரே – தெய்வானை
வள்ளியமர் பாகத்தான் மாண்புலவர் சேறையர்கோன்
தெள்ளுதமிழ்த் தாகத்தான் சேர்வு

67. தெண்மழலைப் பூவிதழும் தேமொழியார் கார்க்குழலும்
ஒண்மலர்த்தேன் ஊற்றொளிரும் சேயூரே – எண்ணுமனம்
நீங்கா துறைந்திடுவான் நின்மலைதன் ஒண்மதலை
ஓங்கார ணப்பொருளான் ஊர்

68. ஊர்கூடும் சந்தையினும் ஒண்தவர்தம் சிந்தையினும்
பார்வாழும் பண்டமிடை சேயூரே – கார்முகத்தால்
மாய விலங்கையரை மாய்த்தான் திருமருகன்
தாயனைய சண்முகன்றன் சார்வு

69. சார்விருந்தும் தண்டமிழ்நூல் ஆய்குநரும் தம்சிறுமை
தீரமகிழ் சிந்தையுயர் சேயூரே – ஆரமிழ்தாய்
என்னும் அருள்புரிவான் ஏழையர்க்குக்கைகொடுக்கும்
மன்றவா ணன்குமரன் வாழ்வு

70. மன்றன் மனைகளிலும் மாதவர்மெய்ச் சிந்தையினும்
நன்றிசையு நாதமெழும் சேயூரே – குன்றெறிந்து
தானவர்க்குக் கூற்றானான் தட்டுளுப்புப் பட்டுநின்ற
வானவர்க்கு வைப்பானான் வாழ்வு

71. உற்றதவர் நெஞ்சுமலர் ஒண்பரிதி வள்ளியம்மை
பொற்கர நாடிக்குமனப் பூங்குவளை – உற்றொளிரத்
தோன்று கலைமதியம் தொல்குறிஞ்சி யானசேயூர்
ஆன்றவனைப் பாடுவதெம் அன்பு

72. பாடுவார் பாவம் பறந்தொழியப் பார்த்திடுவான்
நாடுவார் நாடரிய நன்முருகன் – நாடறியும்
செந்திலான் சேயூர்ச் சிவகுமரன் செம்புகழ்கள்
எந்தநா ளும்இசைப்பேன் யான்

73. யான்என தென்னும் இருசெயலும் போயொழிந்து
தீனனாய் நின்றன் திருவடியை – மோனநிலை
நின்றுன் சடாக்கரத்தை நேசிக்கும் அந்நிலைமை
என்றுதான் ஈவாய் இனிது

74. இனியாரை நம்பி இருந்திட்டாய் நெஞ்சே!
கனியிருக்கக் காய்கவர்வார் போல – மனிதர்களைப்
பாடியது போதுமினிப் பைந்தமிழ்ச்சே யூர்க்குமரன்
ஈடிலாச் சேவடியே ஏத்து

75. ஏத்தித் தொழுவருணை ஏந்தல் தமிழிருக்க
நாத்தழைய ஓதாமல் நாளெல்லாம் – சீத்தைச்
சிறுமதியால் கீழ்ப்பட்டேன் சேயூர் இடங்கொள்
இறைவா! இரங்கா யினி

76. இனியானை தீயர்க் கினியானை எம்மை
முனியானை கீழ்மைமுனி வானை – நினைவார்க்
கருள்வானை அல்லார்க் கருளானைச் சேயூர்ப்
பொருளானை நெஞ்சமே போற்று!

77. போற்றிநஞ் சேயூர்ப் புனமயிலோன் சேவடிக்கண்
ஊற்றெழுங்கண் ணீரோ டுருகுவார் – கூற்றுவனுக்(கு)
அஞ்சார் வினையொழிப்பர் ஐந்தறிவும் ஆறுமுகன்
செஞ்சரணத் தாட்படுப்பார் சேர்ந்து

78. ஆளானோம் நம்மை அறுமுகவன் ஆட்கொள்வான்
கேளாக என்றும் கிடைத்திடுவான் – வேளையிது
சென்றிடுவோம் சேயூர்ச் சிவகுமரா என்றுருகி
நின்றிடுவோம் இன்றருள்வான் நேர்ந்து

79. நேர்ந்த பழங்கதைகள் நீ நினைந்து மாழாந்து
சேர்ந்தநிலை விட்டொழிக! சூர்ப்பகையைத் – தேர்ந்தழித்த
வெற்றிவேற் கந்தன் விளங்கிடுநஞ் சேயூரை
உற்றுயர்வோம் நெஞ்சே உணர்ந்து

80. துஞ்சா மலவிருளைச் சுட்டெரிக்கும் வேற்படையான்
மஞ்சாடு மால்வரைகள் வாழ்மயிலோன் – செஞ்சேவல்
ஆர்ந்த கொடியுடையான் ஆறுமுகன் வாழ்சேயூர்
சேர்ந்துய்வோம் தீவினைகள் செற்று

81. செற்றம் தவிர்ந்துன்னைச் சேவிக்கும் நல்லோரைக்
கற்றுத் தெளிந்திடுமா கற்பித்தாய் – பற்றுமனம்
உன்னடிக்கே வைத்திட்டாய் உய்ந்தேனான் சேயூரா!
என்னை யினிநிகர்வர் யார்!

ℰ யார்தாம் அருணகிரி எந்தையார் சேறையர்கோன்
சீர்வீர ராகவனார் செப்புதல்போல் – ஆரமிழ்தச்
சொல்லால் உனைப்பரவும் தொன்னலத்தார் சேயூர்வாழ்
எல்லொளிசேர் ஈசா இயம்பு

83. இயம்கடலின் மாறா எழுந்திசைப்பச் சேயூர்
வயங்குமயி லோன்புகழ்கள் வாழ்த்தி – இயங்கமரர்
தொண்டர்குழாம் உள்ளுருகித் தோத்தரிக்கும்
ஏத்தொலிபோய்
எண்டிசையும் சூழ்ந்துயரும் இன்று

84. இன்றுநா ளைக்கென் றிருந்துநா ளத்தனையும்
சென்றொழிந்த தெண்ணித் திகையாதே – இன்றெழுக!
செஞ்சேவ லான்சேயூர்ச் செம்மல் அருள்பெறுவோம்
நெஞ்சமே அஞ்சாதே நீ

85. நீங்காத ஆணவப்பேய் நில்லா தெழுந்தோடும்
பாங்காய்ப் புலனைந்தும் பண்புநெறித் – தேம்பாமல்
நின்றுபணி கேட்கும் நிலைசிறக்கும் வெள்வேலான்
இன்றருள்வான் சேயூரில் இஃது

86. இஃதுன்னால் ஆகும் இறையேயெம் சேயூரா!
பஃறொடைப்பா மாலைகளால் பாடியுனை – யஃகாநல்
அன்பாற் றொழுதாரை ஆண்டாயன் றோவெனையும்
நின்றருள்வார் நீயல்லால் யார்!

87. யாரன் றகத்தியனார்க் கின்றமிழின் அஞ்சுரைத்தார்
யாரன்று நக்கீரன் இன்னலது – தீரவேற்
கைப்படையாற் காத்திட்டார் சேயூர்வாழ் கந்தனெனும்
அப்பெருமான் அல்லனோ ஆங்கு!

88. அல்லனோ வார்பிறவி யாற்றில் கிடந்தழுந்திச்
செல்லலுற்ற தெல்லாமுந் தீரவே – செல்லுலவும்
சீரகத்த சோலைவளர் சேயூரா என்றோதில்
தாரகவே லானருள்வான் றான்

89. தானே தனக்குவமை யானானச் சங்கரற்கும்
மோனச் செழும்பொருளை முன்னுரைத்தான் – தேனமரும்
சொல்வள்ளி காந்தன் சுரர்தொழநம் சேயூராம்
இல்லுடையான் றானெம் இறை

90. எம்இறைவன் அவ்வைக்கும் இன்மொழிப்பொய் யாமொழிக்கும்
செம்மைநலம் தந்து சிறப்பித்தோன் – அம்மதுரைச்
சங்கத்தார்க் குண்மையினைச் சாற்றினான் சேயூரில்
தங்கினான் றானெமக்கோர் காப்பு

91. காப்பிலா ஊரில் கடிது பகைவர்குழாம்
நீப்பரிய கேடு நிகழ்த்தல்போல் – தீப்புலன்கள்
ஐந்தும் செயுங்கொடுமை ஆற்றேனெம் சேயூரா!
வந்தென்னைக் காப்பதுநின் மாண்பு

92. புண்ணியநற் காழியிலே பூங்குழவி யாயம்மை
தண்ணமுதம் ஊட்டத் தமிழ்பாடி – எண்ணாரை
வென்றந்த மீனவற்கு வெப்பொடுகூன் போக்குபிரான்
இன்றிருந்தான் சேயூர் இனிது

93. இன்பார் தணிகைப் புராணம் எழிற்காஞ்சி
அன்றிருந்த கச்சியப்பர் ஆக்கியசீர் – குன்றாத
கந்தபுரா ணங்கற்றார் காலார் பொழிற்சேயூர்
எந்தையருள் எய்தினரே யாம்

94. ஆமவ் இருவினைகள் ஆங்குச் சமமாக
ஏமப் பரிபாகம் எய்துநிலை – யாமடையத்
தத்துவங்கள் எட்டாத் தகளுரும் சேயூரெம்
வித்தகனே வந்தருள்வான் மேல்

95. மேற்சென் றறிவுறுத்த வீரன்சொல் கேளாத
கூற்றனாம் சூரன் குலமறுத்த – வேற்சேயோன்
சீரலைவாய் தென்பழநி ஏரகமே போல்விரும்பும்
ஊரெனச்சே யூரிருந்தான் உற்று

96. உற்றநம் சேயூர் உடையபிரான் றன்புகழைக்
கற்றுரு காதார் கதையெல்லாம் – எற்றைக்கும்
இன்னாச் செயலாய் இழிந்தொழிவ தல்லாமல்
என்னாளு மாண்புறுவ தின்று

97. இன்றிருப்ப தெல்லாம் இமைக்குமுன் போயொழியும்
என்றறிந்தும் நின்னடியை எய்தாமல் – குன்றிடுவேன்
இப்புவியில் பெற்ற திதுபோதும் சேயூரா
எய்த்தேன் எடுத்தாள்வா யீங்கு

98. ஈங்கெம் வினைப்பகைகள் இன்னலெலாம் போயொழியத்
தீங்காண வத்தின் செருக்கொழியப் – பாங்கேறச்
செல்வோம் எழிற்சேயூர்ச் செவ்வேளே யிம்மைநலம்
எல்லாம் தருவான் இசைந்து

99. இசையும் ஒருபொருளை யில்லென்றல் யார்க்கும்
இசையும் சிறப்பன்றாம் எம்மான்! – நசைபெருக
நின்னருளை வேட்டேன் நிலையறிந்து சேயூரா!
என்குறையை நீக்கலுனக் கேற்பு

100. புற்றுருவாய்ச் சேயூர் புரிந்தமரும் எந்தைக்கும்
முத்துவா ளித்தாய்க்கு முத்தனைய – சித்தம்
இனித்திடவே வந்தமரும் எம்மான்நின் பாதம்
கனித்தமிழாற் சொன்னேன் கனிந்து

101. கனிந்து கனிந்துருகிக் கண்பனிப்ப நின்று
நினைந்துன் அடிபரவும் நேயம் – மனந்தழைவார்
எண்ணும் பதினாறு பேறுமெய்ச் சித்திகளும்
நண்ணுவார் சேயூரில் நன்கு

102. நண்ணுநின் சீர்த்தி நவிலும் திறமறியேன்
எண்ணும் விருப்பால் இயம்பியதாம் – வெண்பாநூல்
தேரும் சிறப்பனைத்தும் இன்றெனினும் சேயூரா!
சீருறவே கொள்வதுன்றன் சீர்

" ஓம் சரவணபவ "



காஞ்சி மாவட்டம், செய்யூர் வட்டம், செய்யூரில் உள்ள சேயூர் திருமுருகன் திருக்கோயிலுக்கு குடமுழுக்கு செய்யவிருப்பதால் திருப்பணிக்குத் தாங்கள் தங்களால் இயன்ற அளவில் பொருளுதவி அடியிற்கண்ட முகவரிகளில் ஒன்றில் செலுத்தி அருள்மிகு கந்தசாமியார் (செய்யூர்) அருளைப்பெற வேண்டுகின்றேன்.



இருப்பிடம் :
டாக்டர்.சி.ஆர்.சுந்தரராசன்,
எண் 5, பி. எஸ். சிவசாமி சாலை,
மயிலாப்பூர், சென்னை–4.

டாக்டர்.சி.ஆர். சுந்தரராசன்,
அறங்காவலர்,
ஜமீன் அலுவலகம்,
செய்யூர் – 603 302.